16th March 1959]

have 8,634 gallons stored in underground tanks and not in loose tins. Similarly in Patulla Road, 35,880 gallons are stored in underground tanks and not in loose tins. In the Kanyakumari branch, 44,500 gallons of petrol are stored in underground tanks.

*Travel concessions to N.G.Os. in the State Transport*

*831-L Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரில் ஓடும் அரசாங்க பஸ்களில் பிரயாணம் செய்ய (concessional season tickets) சலுகைக் கட்டண அனுமதிச் சீட்டுகள் வழங்கப்படுகின்றனவா ?

(ஆ) என்.ஜி.ஓ. ஊழியருக்கு பிரத்தியேக தனிச் சலுகைக் கட்டண முறை புகுத்த யோசனை உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Season tickets are being issued in some of the routes in Madras City.

(*b*) Non-Gazetted employees of the Madras State Transport Department are provided with free duty passes to travel from their residence to their place of duty and back. There is no proposal to extend any concession to other non-gazetted Government servants for their journeys in State Transport buses.

SRI S. M. ANNAMALAI: சில ரூட்டுகளில்தான் இப்படிப்பட்ட கன்ஸெஷன்கள் தரப்படுகின்றன என்று மதிப்பிற்குரிய அமைச்சர் சொன்னார். அவை எந்தெந்த ரூட்டுகளில் தரப்படுகின்றன ? அவைகளை என் மற்ற ரூட்டுகளுக்கு விஸ்தரிக்கவில்லை ?

THE HON. SRI R. VENKATARAMAN: வருஷா வருஷம் சில ரூட்டுகள் வீதம் விஸ்தரித்துக்கொண்டே போகிறோம். இதுவரையில், பின் வரும் ரூட்டுகளுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன.

ரூட் 1—திருவல்லிக்கேணி—பாரிஸ்.

ரூட் 6—எம்.யு.வி.–தண்டையார்ப்பேட்டை.

ரூட் 34—கெல்லிஸ்–பாரிஸ்.

ரூட் 11—தியாகராயநகர்–பாரிஸ்.

இதற்குமேல் இப்போது பின்வரும் ரூட்டுகளிலும் கன்ஸெஷன் கொடுக்கப் படுகிறது.

ரூட் 15—பாரிஸ்–அமிஞ்சிக்கரை.

ரூட் 22—திருவல்லிக்கேணி–கெல்லிஸ்.

ரூட் 30—ஐஸ்ஹவுஸ்–மிண்ட்.

ரூட் 31—பாரிஸ்–ஹாமில்டன் பிரிட்ஜ்.

SRI T. S. RAMASWAMY PILLAI: இந்தச் சலுகை மாணவர்களுக்கும் அளிக்கப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் எந்த ஊரிலிருந்து வருகிறாரோ அந்த ஊரில் மாணவர்களுக்கு இந்தச் சலுகையை அளித்துக்கொண்டிருக்கிறோம். இந்தச் சலுகையை சென்னையில் மாணவர்களுக்குக் கொடுக்கவில்லை. அந்த ஊரில் இந்தச் சலுகை மாணவர்களுக்குக் கொடுக்கப்படுவது வழக்கமாகிருந்ததால் அங்கே அதை மாற்றவில்லை.